Regd. No. TN/MS (C) 24 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு

**மாணவர்**

சமுதாயத்திற்கு உழைக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் உள்ள மாணவர்கள் கிராமங்களுக்குச் சென்று பாமர மக்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வாலிபம்**

வாலிபப் பருவம் அபாயகரமான பருவம் சுலபத்தில் நெருப்புப் பற்றிக் கொள்ளக்கூடிய பொருளைப் போல் மிக பத்திரமாய்க் காப்பாற்றப் பட வேண்டிய பருவம்.

-தந்தை பெரியார்

மலர்: 7 சென்னை: 25 - 6 - 83 சனி வெளியூர்: 26 - 6 - 83 ஞாயிறு இதழ்: 246

தி. மு. க. ஆட்சியில் நடந்த ஊழல் முறைகேடுகள்

# உடனடியாகவிசாரணை கமிஷன் அமைக்க லோகநாதன்வற்புறுத்தல்

**பாண்டிச்சேரி, ஜூன் 25- புதுவை மாநிலத்தில் தி. மு. க. ஆட்சியின் போது நடந்துள்ள ஊழல் முறைகேடுகளை விசாரிக்க உடனடியாக விசாரணைக் கமிஷன் ஒன்றை மத்திய அரசு அமைக்க வேண்டும் என புதுவை மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் கோரியுள்ளார்.**

புதுவை மாநில கழக செயலாளர் பி.கே.லோகநாதன் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

கடந்த 3½ ஆண்டு காலமாக வரலாறு காணாத லஞ்சஊழல் ஆட்சி நடந்த புதுவை மாநிலத்தில் ஜனாதிபதி ஆட்சி பிரகடனப்படுத்தப் பட்டுள்ளது.

எங்கும் ஊழல் எதிலும் ஊழல் என்ற வகையில் தி. மு. க. ஆட்சி நடத்தப்பட்டது.

## எங்கும் எதிலும் ஊழல்

தி. மு. க. ஆட்சியில் நடந்த முறைகேடுகள் குறித்த விவரமான புகார் மனு ஜனாதிபதி, பிரதமர், மத்திய உள்துறை அமைச்சர், புதுவை மாநில கவர்னர் ஆகியோரிடம் மாநில கழக சார்பில் ஏற்கனவே அளிக்கப்பட்டுள்ளது.

லாட்டரி ஊழல், நில ஊழல், லாரி பஸ் பர்மிட் ஊழல் இப்படி ஏராளமான ஊழல் புகார்கள் தி மு க மந்திரிகள் மீது கூறப்பட்டுள்ளன.

தி.மு.க. மந்திரிகள் மீது கூறப்பட்ட புகார்களை விசாரிக்க மத்திய அரசு உடனடியாக விசாரணைக் கமிஷன் ஒன்றை அமைக்கவேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

புதுவை மாநிலத்தில் மைனாரிட்டியாக இருந்த தி. மு. க. அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளதை அடுத்து விரைவிலேயே புதுவை சட்டசபைக்கான தேர்தலை நடத்த வேண்டும் எனவும் மத்திய அரசைக் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு பி.கே.லோகநாதன் தெரிவித்துள்ளார்

பிரபல மேக்கப்மேன்

## பீதாம்பரம் சகோதரிமரணம்: முதல்வர் அனுதாபம்

சென்னை, ஜூன் 25— பிரபல மேக்கப்மேன் பீதாம்பரத்தின் சகோதரி ருக்மணி இன்று அதிகாலை காலமானார் அவருக்கு வயது 44, முதல்வர் புரட்சித் தலைவர் தமது துணைவியார் ஜானகி அம்மையாருடன் சென்று மலர் வளையம் வைத்து அனுதாபம்தெரிவித்தார்.

ருக்மணிக்கு இன்று அதிகாலை இதய நோய் ஏற்பட்டு மருத்துவமனை கொண்டு செல்லும்போது உயிர் பிரிந்து விட்டது.

இவரதுகணவர் பெயர் சங்கரநாராயணன் இவர்களுக்கு ஒரு மகன் இருக்கிறார்.

அமைச்சர் கே. ஏ. கே. வும் சென்று மலர்வளையம் வைத்து அனுதாபம் தெரிவித்தார். இறுதிச் சடங்கு இன்று மாலை நடைபெறுகிறது.

## ராமபிரசாத் கமிஷன் விசாரணை

(2-ம் பக்கம்)

கழக ஆட்சியில் சாதனை:

# போக்குவரத்துதுறையில் 4 ஆண்டுகளில் 38 ஆயிரம்பேருக்குவேலை

## முதல்வர்புரட்சிதலைவர் பெருமிதம்

**விழுப்புரம், ஜூன் 25- போக்குவரத்துத்துறையில் மட்டும் கழக ஆட்சியில் 38 ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டிருப்பதாக முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

விழுப்புரத்தில் தந்தை பெரியார் போக்குவரத்து கழகத்தின் தலைமை அலுவலகம், மத்திய தொழிற்கூடம், பயிற்சிநிலையம் டயர் புதுப்பிக்கும் பிரிவு உணவு விடுதி, தொழிலாளர் ஓய்வு விடுதி ஆகிய கட்டிடங்களை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்தார்.

விழாவுக்கு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தலைமை வகித்தார். பெரியார் போக்குவரத்துக் கழக நிர்வாக இயக்குனர் ரத்தினசபாபதி வரவேற்புரையாற்றினார். விழாவில் அமைச்சர்கள் கே. ஏ. கே. டாக்டர் அண்டே, முத்துசாமி, சட்டமன்ற உறுப்பினர்கள் என். கண்ணன், எஸ். டி. உக்கம்சந்த் ஆகியோர் பேசினர்.

ஆந்திராவில் கொத்தடிமைகளாக இருந்து மீட்கப்பட்ட 16 குடும்பங்களைச் சேர்ந்த 64 பேர்கள் தொழில் செய்வதற்காக 90 ஆயிரம்ரூபாய் காசோலையை முதல்வர் புரட்சிதலைவர் வழங்கினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது,

கொத்தடிமை என்ற பெயரில் ஆந்திராவில் பணக்காரர்களால் கொடுமைப்படுத்தப்பட்ட நிலையில் உழைத்து பலன் காணமுடியாமல் இருக்கும் குடும்பங்களைஇங்கே கொண்டு வந்து அவர்கள் அங்கே செய்த தொழிலையே கூட்டுறவு முறையில் செய்வதற்கு வழி செய்த மாவட்ட ஆட்சித் தலைவரையும் அவருடன் ஒத்துழைத்த அதிகாரிகளையும் பாராட்டுகிறேன்.

கொத்தடிமையாக இருந்து விடுதலையாக்கப் பட்டு இருக்கிறார்கள். இதற்கு முன்பிருந்த அரசு எத்தனை அக்கறை காட்டியது.

## கருணாநிதி புளுகு

முன்பிருந்தமுதலமைச்சர் தமிழகத்தில்கொத்தடிமை இல்லை என்றார். சத்திய வாணிமுத்து புள்ளி விவரங்களை வெளியிட்ட போது எவ்வளவு கோபமான வார்த்தைகளால் தாக்கியது யார் என்பதும் 76 ம் ஆண்டு ஜனாதிபதி ஆட்சி பிரகடனம் செய்யப்பட்ட போது எத்தனை பேர் கொத்தடிமைகளாக இருந்து மீட்கப்பட்டுள்ளனர் என்ற வரலாறும்உள்ளது.

இப்போது இங்கிருந்து வெளி மாநிலங்களுக்கு வேலைக்கு அழைத்துச் செல்லப்பட்ட கொத்தடிமைகள் விடுவிக்கப் பட்டுக் கொண்டிருக்கின்றனர் அவர்களுக்கு 90 ஆயிரம் ரூபாய் இலவசமாகவும் 90ஆயிரம்ரூபாய் கடனாகவும் கொடுத்து தொழில் செய்ய ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.

பல்வேறு விதமான கொத்தடிமைகள் இருக்கின்றனர். அரசியல் மத, ஜாதிகளில் கொத்தடிமைகள் இருந்து வருகிறார்கள். இவர்களை கொத்தடிமையிலிருந்து மீட்டு கல்வி, வாழ்க்கைக்கு உத்தரவாதம் தந்தால் தான் நக்சலைட் போன்றவர்கள் தோன்றாமல் இருப்பார்கள்.

## கழக ஆட்சியில் 38 ஆயிரம் பேருக்கு வேலை

போக்குவரத்து கழகங்களில் 7 ஆண்டுக்கு முன்பு 28 ஆயிரம் பேர் பணியாற்றினார்கள். நாம் ஆட்சிக்கு வந்து 38 ஆயிரத்து 76 பேருக்கு வேலைவாய்ப்பு தந்திருக்கிறோம். யாருக்கும் நாம் வேலை வாய்ப்பு தரவில்லை என்று சொல்லும் நல்லவர்கள் இந்ததேசத்திற்காக போராட்டம் நடத்துவோம் என்கிறார்கள்.

4 ஆண்டுகளில் 38 ஆயிரம் பேருக்கு வேலை கொடுத்திருக்கிறோம். யார் வேலையில்லா திண்டாட்டத்தை ஒழிக்க முயற்சி எடுத்துக் கொண்டது?

சத்துணவு திட்டத்தில் எத்தனை பேருக்குவேலை வாய்ப்பு கொடுத்திருக்கிறோம். இதையெல்லாம் கணக்கு பார்க்க மாட்டார்கள். எங்கு பல்லி இருந்தது என்று பார்க்கிறார்கள். யாராவது செத்தால் அதை வைத்து இந்த திட்டத்தை நிறுத்த முடியாதா என்று பார்க்கிறார்கள்.

குடும்பத்தில் ஒருவருக்கு வேலை என்றால் எப்படி என்கிறார்கள், அதற்காக 15 கோடி ரூபாய் ஒதுக்கினால் எப்படி நடத்தப் போகிறாய்என்கிறார்கள். இப்போது போராட்டம் நடத்தப்போகிறார்களாம். நடத்தட்டுமே! பாதயாத்திரை வேண்டுமானால் கூட போகட்டுமே!

## போராட்டம் எதற்கு?

தென்னாற்காடு மாவட்டத்தில் 1784 இணைப்புச் சாலைகளை போட்டிருக்கிறோம், நாங்கள் ஆட்சிக்குவரும்வரை ஏன் நீங்கள் செய்யவில்லை. போராட்டம் எதற்கு? நாங்கள் செய்ததற்காகவா? அல்லது நீங்கள் செய்யாமலிருந்ததற்காகவா?

குழந்தை உணவில் கொள்ளை யடிப்பவர்கள் சமூக விரோதிகள். அவர்கள் அதிகாரிகள் அல்ல. அரசியல் வாதிகளாக இருந்தால் அவர்களை தியாகிகள் என்று சொல்ல முடியாது.

இன்றைக்கு ஏற்பட்டுள்ள கிருஷ்ணா நதிநீர் திட்டம் 15 டி.எம்.சி தண்ணீர் கிடைக்கக் கூடியது. ஆனால் கருணாநிதியின் வீராணம் திட்டத்தில் இரண்டரை டி.எம்.சி. தண்ணீர் தான் கிடைத்திருக்கும். இப்போது வீராணத்திலும் தண்ணீர் இல்லை. எந்த தண்ணீரை சென்னைக்கு கொடுத்திருக்க முடியும்?

## கருணாநிதியின் எண்ணம்

வாலறுந்த நரிபோல- நம் பெயர் கெட்டது போல ராமச்சந்திரன் பெயரும் கெடட்டும் என கருணாநிதி நினைக்கிறார்,

சென்னையில் ஆந்திரரும் இருக்கிறார்கள். ஆந்திராவில் தமிழரும் இருக்கிறார்கள். இருதரப்பு மக்களின் வசதியை கருதி சென்னைக்கு குடிநீர் திட்டமும் ராயலசீமா பகுதிக்கு பாசன வசதிக்கு தண்ணீர் கிடைக்கும்வகையிலும் திட்டத்தை தயாரித்திருக்கிறோம்.

இந்த அமைச்சரவையில் தவறு இருந்தால் என் பொறுப்பு. சரியாக பணி செய்யவில்லை என்றால் நான் பதில் சொல்ல வேண்டும், ஏனென்றால் நான் தலைமை ஏற்றிருக்கிறேன்.

மின்சாரம் உற்பத்தி செய்ய ஒருயூனிட்டுக்கு 77 காசு ஆகிறது விவசாயிகளுக்கு 12 பைசாவுக்கு தருகிறோம். 65 காசு நட்டம்ஏற்படுகிறது. கேரளாவிலிருந்து 48 பைசாவுக்கு மின்சாரம் வாங்குகிறோம். இப்போது அங்கே மின்சார உற்பத்தி இல்லை என்பதால் நாம் தந்து கொண்டிருக்கிறோம்.

## மின் கட்டணத்தை உயர்த்தியது கருணாநிதியே

கருணாநிதி 8 பைசாவாக இருந்த மின் கட்டணத்தை 12 பைசாவாக உயர்த்தினார், அவசர நிலையை பயன்படுத்தி 12 பைசா கட்டணத்தை 16 பைசாவாக உயர்த்தினார்.

நாம் இன்னும் சிறு விவசாயிகளுக்கு 12பைசாவுக்கு மின்சாரம் கொடுக்கிறோம். முதலாளிகளிடம் அதிகமானகட்டணம் வசூலிக்கிறோம். அதை யாரும் கேட்பதில்லை.

விவசாயிகளின் நன்மைக்கு இந்த அரசு ஏராளமாக செய்திருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

புதிய அமைச்சர் 29-ந் தேதி பதவி ஏற்பு:

## கழக அரசு 198 -ல் கொண்டுவந்த பத்திரிகை திருத்த

# சட்டம்வாபஸ்

## முதல்வர் புரட்சித்தலைவர் பேட்டி

**சென்னை, ஜூன் 25- கழக அரசால் 1982-ம் ஆண்டு கொண்டு வரப்பட்ட பத்திரிகை திருத்த சட்டம் வாபஸ் பெறப்படும் என முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

புதிய அமைச்சர் 29-ந் தேதி பதவி ஏற்பார் எனவும் முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

சென்னை கோட்டையில் நெல்லிக்குப்பம் பாரி சர்க்கரை ஆலை பிரச்சினை பற்றி ஆலை நிர்வாகிகளுடன் முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்பின்னர்நிருபர்களுக்கு பேட்டியளிக்கையில் கூறியதாவது:.

புதிய அமைச்சர் வரும் 29 ந் தேதி பதவி ஏற்பார் பாண்டிச்சேரி அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது குறித்தும் நாடாளுமன்ற துணை சபாநாயகர் ராஜினாமா பற்றியும் நான் எந்தவிதக் கருத்தும் தெரிவிக்க விரும்பவில்லை.

பத்திரிகை சட்டத்தில் சட்டசபையில் நாங்கள் கொண்டு வந்த சட்டத் திருத்தத்தை மட்டும் வாபஸ் பெறுவோம்.

ஏற்கனவே உள்ள பழைய சட்டம் (1960ம் ஆண்டு மூலச் சட்டம்) அப்படியே இருக்கும்.

பாரி சர்க்கரை ஆலை தொழிலாளர்களுக்கு கூடுதல் சம்பளம் தருவதாக சொல்லி இருக்கிறார்கள்

இன்னும் 2 நாளில் தொழிற்சங்கத் தலைவர்களை அழைத்துப் பேசுவேன். ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுக்க வேண்டி உள்ளது. சமரசமாக செல்லவேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

# பாகிஸ்தான் அணுகுண்டு வெடித்ததா?

புதுடெல்லி, ஜூன் 25- பாகிஸ்தானில் கடந்த 13-ந் தேதியன்று நில அதிர்ச்சி போன்ற அதிர்ச்சி ஏற்பட்டதாக இந்திய வானிலை ஆய்வு நிலையம் தெரிவித்திருந்தது.

இந்த அதிர்ச்சி பாகிஸ்தான் அணுகுண்டுவெடித்ததால் ஏற்பட்டிருக்கக் கூடும் என ஒரு பத்திரிக்கை செய்தி தெரிவித்திருந்தது. இந்த அதிர்ச்சி ஆஜ்மீர், டெல்லி, பூனா, வாரணாசி ஆகிய இடங்களில் உள்ள ஆய்வு நிலையங்களில் கடந்த 13ந்-தேதி பகல் 1.34மணிக்குபதிவானதை அப்பத்திரிக்கை சுட்டிக் காட்டியிருந்தது.

அணுகுண்டு வெடித்ததாக பத்திரிக்கையில் வெளிவந்த செய்தியை டெல்லியில் உள்ள பாகிஸ்தான் தூதரகம் மறுத்துள்ளது. அந்தசெய்தி தவறானது எனவும் அறிவித்துள்ளார்,

**கொள்கை பரப்புச் செயலாளர்**

**சிந்தனைச் செல்வி**

# ஜெயலலிதா

**கட்டுரை நாளை வரும்**

ராஜ்யசபை உறுப்பினர் பதவி

## 6 இடங்களுக்கு ஜூலை 22-ல் தேர்தல்

புதுடெல்லி, ஜூன் 25- தமிழ்நாட்டைச் சேர்ந்த 6 ராஜ்யசபை உறுப்பினர்களின் பதவிக்காலம் அடுத்த மாதத்துடன் முடிவடைகிறது.

கழக உறுப்பினர்கள் ஏ. பி. ஜனார்த்தனம், யு. ஆர். கிருஷ்ணன், நூர்ஜகான்ரசாக் மற்றும் இந்திரா காங்கிரஸ் கருப்பையா மூப்பனார்,

(1ம் பத்தி பார்க்க)

(5ம் பத்தி தொடர்ச்சி)

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் பி. ராமமூர்த்தி, மாறன் ஆகிய 6 பேர்களின் பதவிக்காலம் முடிவடைகிறது. இவர்களுக்கு பதிலாக புதிய உறுப்பினர்களை தேர்ந்தெடுப்பதற்கான தேர்தல் வரும் ஜூலை மாதம் 22ம் தேதி நடைபெறவிருக்கிறது.

சந்திரசேகருக்கு டெல்லியில் வரவேற்பு,

## அமைச்சர் திருநாவுக்கரசு பங்கேற்பு

சென்னை, ஜூன் 25- கன்னியாகுமரி முதல் டெல்லிவரை நீண்ட பாதயாத்திரை மேற்கொண்டஜனதாதலைவர் சந்திரசேகருக்கு புது டெல்லியில் இன்று வரவேற்பு விழா நடைபெறுகிறது.

இந்த வரவேற்பு விழாவில் கழகம் சார்பில் தொழிலமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொள்கிறார்.

இன்று காலை அவர் விமானம் மூலம் பம்பாய் வழியே டெல்லிக்குப் பயணம் ஆனார்.

**24** வயதே நிரம்பிய இளம் காளை. திருமணம் கூட ஆகாத திராவிடத்து தீரன்.

புரட்சித்தலைவர் போர்ப்படையின்புரட்சிவீரன்,

காற்றினும் கடுகிச் செயலாற்றிய கழகத்தின் கடமை மறவாத கடைசித் தொண்டன்.

அஞ்சாநெஞ்சன்—ஆற்றல் மறவன்—போற்றுதலுக்குரியோன்,

இயக்கத்தின் தொடக்க நாள் தொட்டு தொய்வின்றிப் பணியாற்றி வந்த கொள்கைப்பிடிப்பும் இலட்சியத்துடிப்பும் மிக்க இளைஞன்.

அகன்ற நெற்றி-அறிவொளி வீசும் கண்கள்-விரிந்த மார்பு - திரண்ட தோள்கள் - எடுப்பான மூக்கு - துடிப்பான கைகள் ஏறுநடை- ஏற்றமிக்க உடை- சுகுமாரன் எனும் சுந்தரப் பெயருடையோன் சேலம் மாவட்டம் பூலாவாரியின் கழக அமைப்பாளன்.

**1972 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26 ஆம் நாள் தமிழகமெங்கும் வாக்காளர் பேரணி நடத்தி "ஊழலின் உறைவிடம் கருணாநிதியை ஆதரிக்கக் கூடாது அப்படி ஆதரித்தால் அவர்கள் தங்கள் சட்டப் பேரவை உறுப்பினர் பொறுப்பிலிருந்து விலக வேண்டும்" என்ற கோரிக்கை அடங்கிய மனுவினைக் கொடுக்குமாறு ஆணையிட்டார் இதய தெய்வம் புரட்சித தலைவர் அவர்கள்.**

அவரின் ஆணையினை ஏற்று பூலாவாரி சுகுமாரனும் வீரபாண்டி தொகுதியில் வாக்காளர் பேரணி நடத்தி அந்தத் தொகுதியின் சட்டப் பேரவை உறுப்பினர் ஆறுமுகத்திற்கு மனுக் கொடுத்தார்.

மனுக் கொடுத்த காரணத்திற்காகவே சுகுமாரன் மீது வழக்குத் தொடுத்தார் ஆறுமுகம்.

வீரபாண்டி ஆறுமுகம் கருணாநிதிக்கு மிகவும் நெருக்கமானவர். சேலம் மாவட்டத்தில் அன்று அவர் நடத்திய அநியாய அட்டூழியங்கள் சொல்லுந்தரமன்று.

# ★ சுகுமாரனுக்கு சுடர் ஏற்றுவோம் ★

அவருடைய லீலாவிநோதங்களையெல்லாம் அவ்வப்பொழுது நாட்டுமக்களுக்கு விளக்கி வந்தார் சுகுமாரன்.

அதனால் நாளுக்கு நாள் ஆறுமுகத்திற்கு சுகுமாரன் மீது காழ்ப்புணர்ச்சி வளர்ந்தது. இத்தனைக்கும் ஆறுமுகத்தின் அண்ணன் மகன் தான் சுகுமாரன். ஆறுமுகம், சுகுமாரனைக் குறிவைத்தார்.

**1974 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 24-ம் தேதி மறுநாள் வரவிருக்கும் வழக்கு தொடர்பாக வழக்கறிஞரை சந்தித்து விட்டு சுகுமாரனும் அவனுடைய தந்தை பழனியப்பனும் இரவு பத்துமணியளவில் மோட்டார் சைக்கிளில் வீடு திரும்பியபோது, நடுவழியில் கற்களை வைத்து தடுத்து நிறுத்தப்பட்டனர். துப்பாக்கியால் சுடப்பட்டனர். கட்டியால் குத்தப்பட்டனர் கண்கள் தோண்டப்பட்டனர். அத்தகைய கொடுஞ்செயலை செய்த கொடுமையாளர்கள் யார் என்று தெரியவில்லை**

**மோப்ப நாய் வந்தது. வீரபாண்டி ஆறுமுகம் வீட்டிற்குச் சென்றது. அங்குப் பூட்டியிருந்த ஒரு அறையினைத் தட்டியது. ஆனால் அதனைத் திறக்க மறுத்துவிட்டனர் காவல்துறையினரும் கைபிசைந்து திரும்பி விட்டனர்.**

**இதனிடையில் சென்னை வந்து இரயிலில் திரும்பும் போது விழுப்புரத்துக்கு அருகில் தன்னுடைய கைத்துப்பாக்கி காணாமல் போனதாக காவல் நிலையத்தில் புகார் கொடுத்தார் வீரபாண்டி ஆறுமுகம். துப்பாக்கி இன்று வரை கண்டு பிடிக்கப் படவில்லை.**

குற்றவாளிகள் யார் என்று கண்டு பிடிக்க முடியவில்லை என்று வழக்கினையே கைவிட்டுவிட்டனர் காருண்ய மூர்த்தி கருணாநிதியின் ஆட்சியில்.

கருணாநிதியைக் கொலை செய்துவிடுவதாக ஒரு மிரட்டல் கடிதம் வந்த 24 மணி நேரத்தில் எழுதியவன் யார் என்பதை கண்டு பிடித்த தமிழக காவல் துறைக்கு சுகுமாரனையும் அவன் தந்தையையும் கொலை செய்தவர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

அரக்கனின் ஆட்சி அகற்றப்பட்டது. ஆளுநர் ஆட்சி வந்தது. மீண்டும் புலன் விசாரணைச் செய்து வீரபாண்டி ஆறுமுகம் அவர் தம்பி உள்பட 13 பேர்கள் மீது வழக்குப் பேட்டனர்.

## -: மா. சா. எத்திராசன் :-

முன்னாள் தமிழக காவல்துறைத் தலைவர் திரு. அருள் அவர்கள் நீதிமன்றத்தில் சாட்சியாக வந்து சொன்னார். "முதலமைச்சர் கருணாநிதியே இதில் தலையிட்டு வழக்கினைக் கைவிட்டுவிடுமாறு என்னிடம் கூறினார்" என்றார்.

கீழ்நீதிமன்றத்தில் வழக்கு சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிக்கப்படவில்லை என்று குற்றவாளிகள் விடுதலை செய்யப்பட்டனர்.

**மீண்டும் உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்துகொள்ளப்பட்டது அதனை இரண்டு நீதிபதிகள் விசாரித்து இரண்டுவிதமான தீர்ப்பினைத் தந்திருக்கிறார்கள். ஒருவர் மேல்முறையீட்டினை ஏற்றுக்கொண்டு வீரபாண்டி ஆறுமுகத்தின் தம்பி குப்புசாமி நலலப்பன் ஆகிய இருவருக்கும் ஆயுள்தண்டனை வழங்கியுள்ளார். இன்னொருவர் வழக்கினையே தள்ளுபடி செய்து அவர்களை விடுதலை செய்திருக்கின்றார்.**

இறுதியாக தலைமை நீதிபதியின் தீர்ப்பு எதிர்பார்க்கப்படுகின்றது.

**என்னே! விசித்திரம். கொலைதான் இரட்டைக் கொலை என்றால் தீர்ப்புக் கூட இரட்டைத் தீர்ப்பாக இருக்கிறது**

வழக்குமன்றத்திலே தீர்ப்பு எப்படிஇருந்தாலும் மக்கள் மன்றத்திலே தீர்ப்பு சரியாகவே இருக்கிறது என்பதற்கு தக்க சான்றுதான்இன்றைய கழக அரசு

சுகுமாரன் போன்றவர்களின் உயிர் தியாகத்தினால் வளர்க்கப்பட்டுள்ள இந்த இயக்கத்தை நாமும் சுகுமாரன்களாக மாறி காத்திடுவோம்.

**தலைவன் இடுகின்ற கட்டளைக்கு தாள் பணிவோம். தலைவணங்குவோம் என்று அவனுடைய நினைவுநாளில் நாம் சூளுரைப்போம்!**

**சுடர் ஏற்றுவோம்!**

---

★ கணக்கு கூட்டலில் ரப்பர் வைத்து அழிப்பு
★ கணக்குகளில் அடித்தல் - திருத்தல்
★ கமிஷன் அறிவித்தபடி கணக்குப் புத்தகங்களை தரவில்லை

# தி.மு.க.வினர் பணம்கொடுப்பதாக கூறியதைத் தொடர்ந்து பொய்சாட்சியம்?

## ரவீந்திரநாத்திடம் வழக்கறிஞர்கள் கேள்வி

**சென்னை, ஜூன் 25- தி மு க வினர் பணம் கொடுப்பதாகக் கூறியதைத் தொடர்ந்துதான் நீங்கள் பொய் கூறுகிறீர்கள் என ராமபிரசாத்ராவ் கமிஷன் விசாரணையில், ரவீந்திரநாத்திடம் வழக்கறிஞர் ராகவாச்சாரி கேட்டார்**

கமிஷன் முன்தாக்கல் செய்யப்பட்ட கணக்குகளில் ரப்பரால் அழிக்கப் பட்டுள்ளதைப் பற்றியும், அடித்தல் திருத்தல் பற்றி வழக்கறிஞர் வேணு கோபால் ரவீந்திரநாத்திடம் கேள்விகள் கேட்டார்.

நீதிபதி ராமபிரசாத்ராவ் கமிஷன் விசாரணை இன்று தொடர்ந்து நடந்தது.

சாட்சி ரவீந்திரநாத்தை அமைச்சர் பொன்னையனின் வழக்கறிஞர் கே. கே வேணுகோபால் குறுக்கு விசாரணை செய்தார்,

கேள்வி: முதலமைச்சரிடம் கொடுத்த மனுவின் பிரதி உங்களிடம் உள்ளதா?

பதில்: ஆம்.

கேள்வி: அந்தப்பிரதி இருக்கும் பொழுது அதன் செராக்ஸ் காப்பியை ஏன் தாக்கல் செய்கிறீர்கள்?

பதில்: தாக்கல் செய்த நேரத்தில் அது என்னிடம் இல்லை.

கேள்வி: எப்போது செராக்ஸ் எடுத்தீர்கள்

பதில்: நினைவில்லை.

கேள்வி: முதலமைச்சரிடம் கொடுத்த மனுவில் துரைமுருகன், உதயசங்கர் ஆகியோர் பெயர்களைக் குறிப்பிட்டு இருக்கிறீர்கள். ஆனால் அபிடவிட்டில் குறிப்பிடவில்லையே?

பதில்:- அவர்களை முக்கியமானவர்களாக கருதவில்லை.

கேள்வி:- நீங்கள் கொடுத்துள்ள மனுவில் சந்திரன் டாக்குமெண்ட் தயாரிப்பதற்காக பெங்களூர் வந்தார் என்று குறிப்பிட்டு இருக்கிறீர்களே?

பதில்:- அவர் அதற்காக வரவில்லை. பணத்தைத் திருப்பித்தர அவகாசம் கேட்டு வந்தார்

கேள்வி:- நன்றாக அந்த மனுவைப் படித்துப் பாருங்கள் கடைசிப் பாராவைப் பாருங்கள்:

பதில்:- ஆமாம் அப்படித்தான் இருக்கிறது. ஆனால் அவர் பிராமிசரி நோட்டு எழுதுவதற்காக வரவில்லை அவகாசம் கேட்டு தான் வந்தார்.

கேள்வி:- அப்படியானால் மனுவில் உள்ளது தவறு என்று கூறுகிறீர்களா?

பதில்:- ஆமாம்.

கேள்வி: உங்களது கணக்குப் புத்தகத்தில் பல கோடுகள் இடை இடையே விடப்பட்டுள்ளனவே பார்த்தீர்களா?

பதில்: ஆம்.

கேள்வி:- சக்கரபாணி குடும்பத்தினருக்கு ரூ. 15 லட்சம் கொடுத்ததாக எழுதப்பட்டுள்ள கணக்கு கூட அடித்து எழுதப்பட்டுள்ளதாக தெரிகிறதே?

பதில்: (சாட்சி அந்தக் கணக்குப் புத்தகத்தைப் பார்க்கிறார்) சில சமயங்களில் இப்படியும் எழுதுவதுண்டு.

கேள்வி:- பாங்கில் எடுத்து சக்கரபாணி குடும்பத்திற்குப் பணம் கொடுத்ததாகச் சொல்கிறீர்கள்? அந்தக் கணக்கும் சரியாகவரவில்லையே

பதில்:- என்னிடமும் எப்போதும் போதிய பணம் இருப்பதில்லை.

கேள்வி: கணக்கு கூட்டலில் அடிக்கடி ரப்பர் வைத்து அழித்திருக்கிறீர்களே?

பதில்: சில சமயங்களில் அப்படி எழுதுவதுண்டு.

கேள்வி சக்கரபாணி குடும்பத்தினருக்கு பணம் தந்த கணக்கில் எழுதப்பட்டதில் ஒரே மாதிரியான மையில் எழுதப்பட்டுள்ளது.

பதில்:- இல்லை.

கேள்வி:- கமிஷன் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் அப்படியே தரவேண்டும் என்று அறிவித்துள்ளது நீங்கள் ஏன் கணக்கு புத்தகங்களை தரவில்லை:

பதில்: அதை நான் முக்கியமாக கருதவில்லை

கேள்வி: அமைச்சர் விஜயசாரதியைசந்தித்தது என்ன நோக்கத்தில்? என்ன வியாபாரம் செய்வது என்பது பற்றி பேசினீர்களா?

பதில்:- ஒன்றுமில்லை.

கேள்வி:- இரண்டுநாள் தங்கி இருந்து இருக்கிறீர்கள். என்ன தொழில்என்பது பற்றி பேசினீர்களா?

பதில்:- இல்லை.

இவ்வாறு ரவீந்திரநாத் சாட்சியமளித்தார்.

### ராகவாச்சாரி விசாரணை

முன்னாள் ஐ.ஜி.மாணிக்கத்தின் தூண்டுதலின்பேரில் தான் ரவீந்திரநாத் முன்னுக்கு பின் முரணான தகவல்களை ராமபிரசாத்ராவ் கமிஷன் முன்பு கூறி வருவதாக வக்கீல் ராகவாச்சாரி ரவீந்திரநாத்தை இன்று குறுக்கு விசாரணையின் போது கேட்டார்,

6-வது நாளாக ரவீந்திரநாத்தை, லைசென்ஸ் தாரர்கள் சார்பில் என். சி. ராகவாச்சாரி குறுக்கு விசாரணை செய்தார். அப்பொழுது அவர் கேட்ட கேள்விகளும், ரவீந்திரநாத் அளித்த பதில்களும் வருமாறு:-

கேள்வி:- மாணிக்கம் தனது ஒப்புதல் வாக்கு மூலத்தை டெல்லியில் தயாரித்தாரா?

பதில்:- ஆமாம்.

கேள்வி:. தனது ஒப்புதல் வாக்கு மூலத்தின் ஒரு நகலை உங்களுக்கு கொடுத்தாரா?

பதில்: ஆமாம் கொடுத்தார்.

கேள்வி: உங்களது ஒப்புதல் வாக்கு மூலம் தயாரிக்க மாணிக்கம் எந்த வகையில்உதவினார்

பதில்:- அவர் தன்னுடைய, ஒப்புதல் வாக்குமூலத்தின் நகலை கொடுத்தார் மற்றபடி நானும், சுந்தரமூர்த்தியும் விவாதித்து ஒப்புதல் வாக்குமூலத்தை தயாரித்தோம்.

கேள்வி:- சக்கரபாணி மீது சூட் போடும்படி மாணிக்கம்தான் ஆலோசனை கூறினாரா?

பதில்:- இல்லை நான் தான் போட்டேன்.

கேள்வி:- 82 ஜனவரியில் நீங்கள் அனுப்பிய நோட்டீசை யார் தயாரித்தது?

பதில்:- நான் தான் தயாரித்தேன்.

கேள்வி: அந்த நோட்டீசில் குறிப்பிடாத பல விஷயங்களை உங்களுடைய ஒப்புதல் வாக்குமூலத்தில் ஏன் சேர்த்தீர்கள்?

பதில்:- காரணம் எதுவுமில்லை.

கேள்வி:- மாணிக்கம் சொல்லிக் கொடுத்து தானே அவைகளை சேர்த்தீர்கள்?

பதில்:- இல்லை.

கேள்வி:- உங்களுடைய ஒப்புதல் வாக்கு மூலத்தில் கூறப்பட்டுள்ள மந்திரிகள் பற்றிய விவரத்தை ஏற்கனவே நோட்டீசில் குறிப்பிட்டுள்ளீர்களா?

பதில்: இல்லை.

கேள்வி: கடன் பத்திரத்தில் சக்கரபாணி கையெழுத்தை பெற்றுத் தந்ததனால் மாணிக்கத்துக்கு நீங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா?

பதில்:- ஆமாம்.

கேள்வி:- அதனால் தான் மாணிக்கத்தின் வேண்டுகோளின்படி, அவர் கூறுவதையெல்லாம் அவ்வப்போது இங்கு கூறுகிறீர்கள்,

பதில்: இல்லை.

கேள்வி:- படத்தயாரிப்பில் ஈடுபட்டதுண்டா?

பதில்:- உண்டு.76-7-ல் ஒரு படம் தயாரித்திருக்கிறேன்.

கேள்வி:-தமிழ்ப்படஉலகில் நுழைய ஆசைப்பட்டு அதற்காக சுகுமாரனை சந்தித்து பண உதவி செய்தீர்களா?

பதில்:- இல்லை.

கேள்வி:- கர்னாடகாவில் இருப்பதால் தமிழக அரசியலை பற்றி தெரியாது என் சொன்னீர்கள் அல்லவா?

பதில்:- ஆமாம்.

கேள்வி: அப்படி இருக்கும்போது, மாணிக்கத்திற்கு உதவி செய்யும் பொருட்டுதான், அரசியல் ரீதியில், ஒப்புதல் வாக்குமூலத்தை தாக்கல் செய்திருக்கிறீர்கள் என்கிறேன்.

பதில்: இல்லை.

கேள்வி:- சக்கரபாணி உங்களுக்கு அனுப்பிய நோட்டீசில் மாணிக்கம் தன் மீது கிரிமினல் நடவடிக்கை எடுக்கப் போவதாக மிரட்டினார் என்று கூறியிருக்கிறாரா?

பதில்:- ஆமாம்,

கேள்வி:- பின்னர் மாணிக்கம் சக்கரபாணியை பயமுறுத்தவில்லை என்று எப்படி கூறுகிறீர்கள்?

பதில்:- மாணிக்கம் கூறியதை பயமுறுத்தலாக நான் நினைக்கவில்லை.

கேள்வி:- சக்கரபாணியிடம் பேசும்போது, சி.பி ஐ.அதிகாரிகளிடம் புகார் செய்யப் போவதாக மாணிக்கம் கூறினாரா?

பதில்:- சொல்லியிருக்கலாம்.

கேள்வி:- அப்படி கூறுவதை பயமுறுத்தலாக நீங்கள் நினைக்கவில்லையா?

பதில்:: நினைக்கவில்லை,

கேள்வி:- திமுக வினர் உங்களுக்கு பணம்கொடுப்பதாககூறியதை தொடர்ந்து தான் நீங்கள் பொய் சொல்லுகிறீர்கள்,

பதில்:- இல்லை.

கேள்வி:- நீங்களும் சுந்தரமூர்த்தியும் ஒரே நாளில் ஒப்புதல் வாக்கு மூலம் தயாரித்தீர்களா?

பதில்: ஆமாம்.

கேள்வி: சக்கரபாணியிடம் மாணிக்கம் பேசும் போது, கவுதமனும் அங்கு இருந்ததாக உங்கள் ஒப்புதல் வாக்கு மூலத்தில் குறிப்பிட்டுள்ளீர்களே அது உண்மையா?

பதில்:- இல்லை. தவறுதலாகக் குறிப்பிட்டு விட்டேன்.

கேள்வி:- மாணிக்கத்தின் ஆலோசனைப்படி தானே சாட்சி கூற இங்கு வந்தீர்கள்?

பதில்: இல்லை நானாக வந்தேன்.

கேள்வி: இங்கு சாட்சி சொல்ல வேண்டும் என்று மாணிக்கம் கேட்டுக் கொண்டாரா?

பதில்: இல்லை.

---

## உர விநியோக விழா

தஞ்சாவூர், ஜூன் 25- பாக்ட் உர நிறுவனத்தினர் புதிதாக 40 கிலோ மூட்டைகளில் பாக்ட் டி. ஏ. பி. என்ற உரத்தை விநியோகிக்க தொடங்கியுள்ளனர். இதற்கான விழா தஞ்சாவூரில் நடந்தது.

இந்த விழாவில் தஞ்சை மாவட்ட கூட்டுறவு மார்க்கெட்டிங் பெடரேஷன் சிறப்பு அதிகாரி ஏ எஸ் வேலாயுதன், பாக்ட் அதிகாரிகள் என்சி. ஜார்ஜ் வி பாலசுப்பிரமணியம், பி. ஜெயராமன் சி, கே, ஆர். அய்யர் ஆகியோர் கலந்துகொண்டனர். என் ,வி. ஜார்ஜ் நன்றி கூறினார்.

## சத்துணவுக்கு நிதி

சென்னை, ஜூன் 25— திருவள்ளுவர் போக்குவரத்துக் கழக அண்ணா தொழில்நுட்ப மேற்பார்வையாளர்கள் சங்க உறுப்பினர் தே. மன்னையன் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்திற்காக ரூ. 5001க்கான காசோலையை முதல்வர் புரட்சித்தலைவரிடம் வழங்கினார். அப்போது சங்க கௌரவத்தலைவர் மு. மாணிக்கம், பொதுச் செயலாளர் கணேசன், துணைத்தலைவர்கள் சு. நடராசன், மு.ராமலிங்கம் ஆகியோர் உடனிருந்தனர்.

---

ஊழல் குற்றச்சாட்டுக்குள்ளான

# புதுவை தி.மு.க. ஆட்சி டிஸ்மிஸ்: சட்ட சபையும் கலைப்பு

## ஜனாதிபதி ஆட்சி பிரகடனம்

**புதுடெல்லி, ஜூன் 25- லஞ்சம், ஊழல், முறைகேடு குற்றச்சாட்டுகளுக்குள்ளான புதுவை தி. மு. க. மந்திரிசபை டிஸ்மிஸ் செய்யப்பட்டது, ஜனாதிபதி ஆட்சி பிரகடனம் செய்யப் பட்டுள்ளது.**

புதுவைஆளுநர் சாண்டியின் சிபாரிசினை ஏற்று நேற்று இந்த அறிவிப்பு வெளியிடப்பட்டது.

புதுவை மாநிலத்தில் 6-வது தடவையாக இப்போது ஜனாதிபதி ஆட்சி அமல்படுத்தப்பட்டு இருக்கிறது.

புதுவை மாநிலத்தில் மூன்றரைஆண்டுகாலமாக தி. மு. க. இ. காங்கிரஸ் கூட்டணி ஆட்சி நடைபெற்றுவந்தது.

திமுக முதல்வரும் திமுக மந்திரிகளும் லஞ்சம் ஊழல் முறை கேடுகள் வேண்டியவர்கட்கு சலுகை பெரும் அளவில் செய்து வந்தனர் என்று காங்கிரசாரே வெளிப்படையாகசொல்லி வந்தனர்.

### ஊழலின் உறைவிடம்

திமுக வில் இருந்த ராமலிங்கம் எம்.எல்.ஏ. திமுக முதல்வர் மீது 11 குற்றச்சாட்டுக்கள் கொண்ட குற்றச்சாட்டு பட்டியலை கவர்னரிடம் கொடுத்தார்.

இதன் விளைவு அவர் கட்சியில் இருந்து நீக்கப்பட சட்டசபையில் தி.மு.க, மைனாரிட்டி நிலையைப் பெற்றது.

இந்த நிலையில் திமுகவுக்கு அளித்து வந்த ஆதரவை இந்திரா காங்கிரஸ் வாபஸ் பெறுவதாக அறிவித்தது.

தி.மு.க.வுக்கு மெஜாரிட்டி இல்லை. ஆகவே சட்ட சபையைக் கலைத்து விட்டு ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்யலாம் என்று மத்திய அரசுக்கு கவர்னர் சிபாரிசு செய்தார்.

இதன் அடிப்படையில் பாண்டிச்சேரியில் ஜனாதிபதி ஆட்சியை ஜனாதிபதி ஜைல்சிங் நேற்று மாலை 7 மணிக்கு பிரகடனம் செய்தார்.

### ப. உ. ச. கருத்து

புதுவை திமுக ஆட்சி கலைக்கப்பட்டுஜனாதிபதி ஆட்சி அமல் ஆக்கப்பட்டது குறித்து கழகப் பொதுச் செயலாளர் ப.உ,ச கருத்து வெளியிட்டுள்ளார்.

ப. உ. ச. கூறியதாவது:-

மத்திய அரசு எடுத்த நடவடிக்கை விரும்பத்தக்கதல்ல என்றாலும் தேவையான ஒன்றுதான்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அமைச்சரவையைக் கலைக்கும் அதிகாரம் மத்திய அரசுக்கு இருக்கக் கூடாது என்றபோதிலும் தவறுகள் வரம்பு மீறி நடை பெறும்போது இது போன்ற சட்டமன்றங்களில் எந்தக் கட்சிக்கும் ஆட்சி செய்வதற்கான பலம் இல்லாத சூழ்நிலையில் மத்திய அரசு எடுத்த இந்தநடவடிக்கை விரும்பத்தக்கதே. இந்த சூழ்நிலையில் தேவை தான்.

இவ்வாறு ப. உ. ச. கூறினார்.

---

**தலைமைக் கழக அறிவிப்பு எண்: 98/83**

## வடாற்காடு மாவட்ட குடியாத்தம் தண்டராம்பட்டு ஒன்றிய கிளை கழகங்களின் கவனத்திற்கு...

வடாற்காடு மாவட்டம் குடியாத்தம் தண்டராம்பட்டு ஒன்றிய செயலாளர் பொறுப்புகளுக்கு வருகின்ற 17—7—83-ல் தேர்தல் நடைபெறும்,

மேற்கண்ட 2 ஒன்றியங்களில் 31—5—83 முடிய உறுப்பினர் கார்டுகள் பெற்றபுதிய கிளைக்கழகங்கள் 10-7-83-ந் தேதிக்குள் தேர்தல் நடத்தி நிர்வாகிகள் பட்டியலை தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்,

அப்படி அனுப்பிய கிளைக்கழகச் செயலாளர்கள் மேலமைப்பு பிரதிநிதிகள் மட்டுமே 17-7-83 அன்று நடைபெறும் ஒன்றிய செயலாளர் தேர்தலில் வாக்களிக்க அனுமதி அளிக்கப்படுவர்.

தலைமைக் கழகம் 11-7-83 அன்று வெளியிடும் வாக்காளர் பட்டியலில் உள்ளவர்கள் மட்டுமே வாக்களிக்க அனுமதிக்கப்படுவர்.

16-7-83 அன்று வேட்புமனு பெறப்படும். 17-7-83 அன்று தேர்தல் நடைபெறும்.

இடம், தேர்தல் அதிகாரி முதலியவைகள் பின்னர் அறிவிக்கப்படும்.

எனவே புதிய கிளைக் கழகங்கள் உரிய வெற்றி படிவங்களை மாவட்ட செயலாளரிடமோ ஒன்றிய துணை செயலாளரிடமோ, பெற்று நிர்வாகிகளின் பட்டியலை 10-7-83 தேதிக்குள் தலைமை கழகத்திற்கு அனுப்பி வைத்து ஒப்புதல் பெற்றிட கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**ப. உ. சண்முகம்**

சென்னை-14 பொதுச்செயலாளர்
25-6-83 அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34 NELSON MANICKAM ROAD MADRAS 600 029

EDITOR: E PARASURAMAN



# ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை,

தமிழ்நாடு.

## கல்வி உதவித்தொகை மற்றும் இதர சலுகைகள் வழங்குதல் பற்றிய அறிவிப்பு 1983 - 84

[illegible]ரிப் படிப்பும் மற்றும் அதற்கு மேலும் பயிலும் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஆ[illegible]விடர் (இந்து, கிறிஸ்தவர்) பழங்குடியினர் (எல்லா மதங்களையும் [illegible]) மாணவ மாணவியர்களுக்கு நடப்பு (1983—84) கல்வியாண்டில் வழக்கம் போல கல்வி உதவித் தொகைகள் வழங்கப்படும்.

**1. (அ) பள்ளிகளில் படிக்கும் ஆதி திராவிட இந்து, கிறிஸ்துவ மதத்துக்கு மாறிய ஆதி திராவிடர் மற்றும்/ மாணவ/ மாணவியர்களுக்கு கல்வி/ பழங்குடியின உதவித்தொகை.**

நடப்பு (1983-84) கல்வியாண்டில் நான்கு முதல் பத்தாம் வகுப்பு வரை பயிலும் தகுதி வாய்ந்த எல்லா ஆதிதிராவிடர் இந்து கிறிஸ்துவ மதத்துக்கு மாறிய ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் (எல்லா மதங்களையும் சேர்ந்தவர்கள்) மாணவ-மாணவியர்களுக்கு அவர்களது பெற்றோர் அல்லது பாதுகாவலர் ஆண்டு வருமானத்தைப் பாராமல் இலவசமாக எல்லா பாடப் புத்தகங்களும் வழங்கப் படுகின்றன. இதற்கென அவர்கள் கல்வி உதவித்தொகை மனு அனுப்ப தேவை யில்லை. உயர்நிலைப் பள்ளிகளில் பயிலும் மாணவ - மாணவியர்கள் பள்ளிகளுக்கு செலுத்த வேண்டிய சிறப்புக் கட்டணத்தை மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர்கள் பள்ளிகளுக்குச் செலுத்திவிடுவார்கள். இதே போன்று பத்தாம் வகுப்பில் பயிலும் மாணவ - மாணவியர்களால் செலுத்தப்பட வேண்டிய தேர்வுக் கட்டணம் அரசு தேர்வு இயக்குநருக்கு ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குநரால் செலுத்தப்படும்.

கல்வி நிலையங்களுடன் இணைக்கப்பட்டுள்ள விடுதிகளில் தங்கி ஆறு முதல் பத்தாம் வகுப்பு வரையிலும் இம்மாணவ/மாணவியர்கள் மாநில அரசு உண்டுறை உதவித் தொகை விண்ணப்பங்களைப் பூர்த்தி செய்து சம்பந்தப்பட்ட மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலருக்கு 15—9—83 க்கு முன் அனுப்பி வைக்க வேண்டும்.

ஆறுமுதல் எட்டாம் வகுப்பு வரையிலும் மாணவ மாணவியர்களுக்கு உண்டுறை புத்தகம், சிறப்புக் கட்டணம் இவைகளுக்கான வருடம் ஒன்றுக்கு மாணவிக்கு ரூ.275/ வீதமும், மாணவருக்கு ரூ. 250/-வீதமும் வழங்கப்படும். ஒன்பது மற்றும் பத்தாம் வகுப்புகளில் பயிலும் மாணவிகளுக்கு வருடம் ஒன்றுக்கு ரூ. 350/.வீதமும் மாணவ ருக்கு ரூ 300/-வீதமும் உண்டுறை செலவுகளுக்கு வழங்கப்படும். இந்த சலுகை பெற மாணவ/மாணவியரது பெற்றோர்/பாதுகாவலரின் ஆண்டு வருமானம் ரூ. 6000/-க்கு மேல் போகக் கூடாது.

**(ஆ) மத்திய அரசு கல்வி உதவித் தொகை:-**

இந்து ஆதி திராவிடர்கள், புத்த மதத்தை தழுவிய ஆதிதிராவிடர்கள், பழங்குடியினர் (எம்மதத்தவராயினும் சரி) ஆகியோருக்கு மட்டுமே மத்திய அரசு கல்வி உதவித்தொகை வழங்கப்படும், ஒரு குடும்பத்தில் பெற்றோர்/பாதுகாவலரின் இரு ஆண் குழந்தைகள் மட்டுமே மத்திய அரசு கல்வி உதவித்தொகை பெறுவதற்கு தகுதி வாய்ந்தவர்கள். ஆனால் எல்லா, பெண் குழந்தைகளுக்கும் மற்ற நிபந்தனை களுக்குட்பட்டு மத்திய அரசு கல்வி உதவித் தொகை வழங்கப்படும்,

மத்திய அரசு கல்வி உதவித்தொகை பெறுவதற்கான வருமான உச்ச வரம்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது,

அ) பெற்றோர்/ பாதுகாவலரின் மொத்த வருமானம் மாதம் ஒன்றுக்கு ரூ. 750/-க்கு மேற்படாமல் இருந்தால் பராமரிப்புத் (உண்டி உறையுள்) தொகை முழுமையும் கட்டாயமாகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும்.

ஆ) பெற்றோர்/ பாதுகாவலரின் மொத்த வருமானம் மாதம் ஒன்றுக்கு ரூ. 750/-க்கு மேற்பட்டும் ரூ. 1000/-த்துக்குள்ளாகவும் இருந்தால்

1) பொறியியல், தொழில் நுட்பம், கட்டிடக்கலை, மருத்துவம், விவசாயம், கால்நடை மருத்துவம் ஆகியவற்றில் பட்டபடிப்பு மற்றும் பட்ட மேல் படிப்பு பயிலுபவர்களுக்கு பராமரிப்புத் (உண்டி உறையுள்) தொகை முழுமையும் கட்டாயமாகச் செலுத்தப் படவேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும்.

2) மற்ற படிப்புகள்:- பராமரிப்புத் (உண்டி உறையுள்) தொகை பாதியும், கண்டிப்பாகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும்.

இ) முழு நேர பணியில் இருக்கும் மாணவர்களுக்கு அவர்களது மாத வருமானமும் அவர்களது பெற்றோர், அல்லது பாதுகாவலரின் மாத வருமானமும் சேர்த்து ரூ. 750/-க்குள் இருந்தால் கட்டாயமாகச் செலுத்த வேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும்.

ஈ) பெற்றோர் / பாதுகாவலரின் மொத்த வருமானம் மாதம் ஒன்றுக்கு ரூ. 1000/-க்கு மேற்பட்டு இருக்குமானால் கல்வி உதவித்தொகை கிடையாது.

மாநிலத்துக்கு வெளியே கல்வி பயிலும் தமிழ்நாட்டைச் சேர்ந்த மாணவர் களுக்கு மத்திய அரசு கல்வி உதவித்தொகை வழங்கப்படும். மாலை நேரக் கல்லூரி களில் கல்வி பயிலும் மாணவர்களுக்கும் சில நிபந்தனைக்குட்பட்டு மத்திய அரசு கல்வி உதவித்தொகை வழங்கப்படும். ஆனால் அஞ்சல் வழிக்கல்வி பயிலுபவர்களுக்கு கல்வி உதவித்தொகை வழங்கப்படமாட்டாது.

குடும்பத்தில் ஏற்கனவே இரண்டு ஆண் குழந்தைகள் மத்திய அரசு கல்வி உதவித்தொகை பெறுவதாலோ அல்லது தேர்வில் வெற்றி பெறத் தவறியதாலோ மத்திய அரசு கல்வி உதவித்தொகை பெற தகுதியை இழந்த மேற்படி சாதிகளை சேர்ந்த மாணவ/மாணவிகளும் மாநில அரசு கல்வி உதவித் திட்டத்தின் விதிகளுக் குட்பட்டு மாநில அரசு கல்வி உதவித்தொகை பெறலாம். கிறிஸ்துவ மதத்திற்கு மாறிய ஆதி திராவிட மாணவ/மாணவியர்களுக்கு மாநில அரசு கல்வி உதவித் தொகை மட்டும்தான் வழங்கப்படும்.

மாநில அரசு கல்வி உதவித்தொகை பெறுவதற்கான ஆண்டு உச்ச வருமான வரம்பு ரூ. 6000/-

கல்வி உதவித்தொகை மனுக்களை பெறுவதற்கான கடைசி தேதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**புதியது:**

| | | |
|---|---|---|
| 1. | மேல்நிலை, சர்டிபிகேட் டிப்ளமா மற்றும் பட்ட படிப்புகள் ஜூன் 1983 ல் திறக்கும் மேல் நிலைப் பள்ளி/கல்லூரிகளில் பயிலுவோர். | 15-9-83 |
| 2. | மேல்நிலை, சர்டிபிகேட் டிப்ளமா மற்றும் பட்டப் படிப்புகள், ஜூலை 1983ல் திறக்க இருக்கும் மேல் நிலைப்பள்ளி கல்லூரிகளில் பயிலுவோர் | 30-9-83 |
| 3. | மருத்துவம், பொறியியல் கால்நடை மருத்துவம் மற்றும் பட்ட மேல்படிப்புகள் பயிலுவோர் | 31-10-83 |

**புதுப்பித்தல்:**

| | | |
|---|---|---|
| 4. | சர்டிபிகேட், டிப்ளமா மற்றும் பட்ட படிப்புகள் பயிலுவோர் | 31-8-83 |
| 5. | மருத்துவம் பொறியியல் மற்றும் பட்ட மேல்படிப்புகள் பயிலுவோர் | 31-10-83 |

மேலே அறிவித்துள்ள கால வரம்பைக் கடந்து வரும் கல்வி உதவித்தொகை மனுக்கள் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

கல்வி உதவித்தொகை மனுக்கள் கீழ்க்கண்ட கல்வி உதவித்தொகை வழங்கும் அலுவலர்களுக்கு அனுப்பி வைக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| 1. | பத்தாம் வகுப்பு வரை உள்ள படிப்புகளுக்கு மாநில அரசு கல்வி உதவித்தொகை. | சம்பந்தப்பட்ட மாவட்ட ஆதிதிராவிட நல அலுவலர் |
| 2. | தமிழ்நாட்டில் உள்ள பள்ளிஇறுதி வகுப்பிற்கு மேல் உள்ள இதர படிப்புகளுக்கான மத்திய-மாநில அரசு கல்வி உதவித்தொகைகள் | மாணவர் பயிலும் கல்வி நிலைய முதல்வர்கள்-தலைமை ஆசிரியர்கள் |
| 3. | வெளி மாநிலங்களில் உள்ள கல்வி நிலையங்களில் பயிலுபவர்களுக்கு மத்திய அரசு கல்வி உதவித் தொகைகள் | இயக்குநர், ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் - நலத்துறை, எழிலகம் (இணைப்பு) சேப்பாக்கம், சென்னை-5. |

மேற்கண்ட கல்வி உதவித்தொகைகளைப் பெறுவதற்கு மாணவர்கள், கல்வி ஆண்டில் உள்ள மொத்த வருகை நாட்களில் 90 சதவீத நாட்களில் கல்வி நிலையங் களுக்கு வருவது அவசியம்.

**தகுதி அட்டைகள்:**

கல்லூரிகளில், மேல் நிலைப்பள்ளிகளில் கட்டணம் செலுத்தாமல் சேர்வதற்கு மத்திய/மாநில அரசு கல்வி உதவித் தொகை பெற தகுதி உள்ள மாணவ/மாணவி யர்களுக்கு தகுதி அட்டைகள் வழங்கப்படும். இதனை சென்னை நகரில் உள்ள கல்வி நிலையங்களுக்கு, சென்னை, ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குநரிடம் இருந்தும் மாவட்டங்களில் உள்ள கல்வி நிலையங்களுக்கு சம்பந்தப் பட்ட மாவட்ட ஆதி திராவிடர் நல அலுவலர்களிடம் இருந்தும் மாணவ/மாணவி யர்கள் உரிய படிவத்தில் விண்ணப்பங்களும் சாதி சான்று, பெற்றோர் அல்லது பாது காவலரின் வருமானம் பற்றிய உறுதி மொழி கொடுத்து பெற்றுக் கொள்ள வேண் டும். இதற்கான விண்ணப்ப படிவங்களையும் இவ்வலுவலகங்களிலேயே பெற்றுக் கொள்ளலாம்.

**கல்வி கட்டண சலுகை,:**

மத்திய, மாநிலஅரசுகல்விஉதவித்தொகை பெற தகுதியற்ற பத்தாம் வகுப்புக்கு மேல் பயிலும் மாணவ மாணவியர்கள் தகுதியுடைய அலுவலர்களிடம் இருந்து சாதி சான்று பெற்று கல்வி நிலைய முதல்வர்களிடம் அளித்தால் கல்வி கட்டணமின்றி அவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

**2 காந்தி நினைவு பரிசுத் திட்டம்:**

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து ஆதி திராவிட (இந்து) வகுப்பைச் சேர்ந்த இருவர் (ஒரு மாணவனும் ஒரு மாணவியும்) இப்பரிசுத் தொகைக்கு தேர்ந்தெடுக்கப் படுவர் 1983 ம் ஆண்டு ஏப்ரல் திங்களில் முழு நேர பகல் பள்ளிகள் மூலம் நடை பெற்ற மேல் நிலை இரண்டாம் ஆண்டு இறுதித் தேர்வுகளில் முதன் முறையிலேயே எழுதித் தேர்ச்சி பெற்ற மாணவ மாணவியருள் அதிக விழுக்காடு மதிப்பெண்கள் பெற்று, நடப்புக் கல்வியாண்டில் மேல் நிலை வகுப்புக்கு மேல் படிப்பைத் தொடரும் மாணவ, மாணவியரே இந்த திட்டத்தின் கீழ் உதவி பெறத் தகுதி உடையவராவர்.

இப்பரிசுத் தொகையைப் பெற வருமான வரம்போ வயது வரம்போ கிடையாது. இத்திட்டத்தின் கீழ் முதலாண்டுக்கு ரூ. 1500-ம் பின்னர் 5 ஆண்டு களுக்கு ஆண்டொன்றுக்கு ரூ. 1000/- வீதமும் ஒவ்வொருவருக்கு வழங்கப்படும். இந்தத் துறையால் வழங்கப்படும் மத்திய/மாநில அரசு கல்வி உதவித்தொகை மற்றும் கடன் கல்வி உதவித்தொகையுடன் இத்தொகையும் கூடுதலாக வழங்கப் படும். சென்ற ஆண்டுகளில் காந்தி நினைவுப் பரிசுத் திட்டத்தின் கீழ் பரிசுத் தொகை பெற்ற மாணவ/மாணவியர்கள் இந்த நடப்பு (1983-84) ஆண்டிலும் தேர்வில் வெற்றி பெற்று தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தால் தாங்கள் பயிலும் கல்வி நிலைய முதல்வர் மூலம் 30—9—83க்குள் இவ்வாண்டிற்கான தொகையினைப் பெற உரிய மனுவினை சென்னை ஆதி திராவிட மற்றும் பழங்குடியினர் நல இயக்குநருக்கு அனுப்புதல் வேண்டும்.

**3. தகுதி வழிவகைப் பரிசுத் திட்டம்:-**

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் பழங்குடியினர் இனத்தைச் சார்ந்த ஒரு மாணவரும் ஒரு மாணவியும் இதேபோல் கிறிஸ்தவ மதத்திற்கு மாறிய ஆதிதிராவிட மாணவர் ஒருவரும் மாணவி ஒருவரும் இத்திட்டத்தின் கீழ் உதவித் தொகைகளைப் பெற தகுதியுடையவராவர். காந்தி நினைவு பரிசுத் திட்டத்திற்கான விதிமுறைகளே இத்திட்டத்திற்கும் பொருந்தும்.

**4. அறிவுக் கூர்மையுள்ள மாணவர்களுக்கு பரிசுத் திட்டம்:**

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் இந்து மதத்தைச் சார்ந்த ஆதி திராவிட மாணவர்கள் இருவர், மாணவியர் இருவர். கிறிஸ்தவ மதத்திற்கு மாறிய ஆதி திராவிட மாணவர் இருவர் மாணவியர் இருவர், பழங்குடி இனத்தைச் சேர்ந்த மாணவர் இருவர், மாணவியர் இருவர் ஆக பன்னிரண்டு பேருக்கு இந்தத் திட்டத்தின் கீழ் சிறப்பு பரிசுத் தொகை வழங்கப்படும். ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் எஸ்.எஸ்.எல்.சி. பொதுத் தேர்வில் மாவட்டத்தில் முதலாவ தாகவும், அதற்கடுத்தபடியாகவும் அதிக விழுக்காடு மதிப்பெண்கள் பெற்று நடப்புக் கல்வியாண்டில் மேற்படிப்பைத் தொடரும் மாணவ மாணவியரே இத்திட்டத்தின் மூலம் பரிசுத் தொகை பெற தகுதியுடையவர். தேர்ந்தெடுக்கப் படுபவர்களுக்கு மாதம் ஒன்றிற்கு ரூ. 80-வீதம் வழங்கப்படும். இந்த சிறப்பு பரிசுத் தொகையினைப் பெறுவதற்கு வருமான உச்ச வரம்பு கிடையாது.

முந்திய ஆண்டுகளில் இத்திட்டத்தின் கீழ் சிறப்பு பரிசுத்தொகை பெற்றவர்கள் கடந்த ஆண்டுத் தேர்வில் வெற்றி பெற்று நடப்பு ஆண்டிலும் 1983-84 தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தால், இப் பரிசுத் தொகையினை தொடர்ந்து பெறலாம். இந்த விவரங்களை உரிய மனுவில் சென்ற ஆண்டு தேர்வு மதிப்பெண் பட்டியலுடன் தாங்கள் பயிலும் கல்வி நிலைய முதல்வர் மூலம் 30-9-83ம் தேதிக்குள் சென்னை ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குனருக்கு அனுப்பவேண்டும். இத் திட்டத்தின் கீழ் பரிசுத்தொகை பெற்றவர்கள் இத்துறையினால் வழங்கப்படும், மத்திய மாநில அரசு கல்வி உதவித்தொகை கடன் கல்வி உதவித் தொகைகளையும் பெறத் தகுதியுடையவராவர்.

**5. கடன் உதவித் தொகை:-**

கல்வி நிலையங்களுடன் இணைக்கப்பட்ட விடுதிகளில் தங்கிப் பயிலும் ஆதி திராவிட இந்துக்கள் ஆதி திராவிட கிறிஸ்துவர்கள் மற்றும் பழங்குடி (மதம் மாறிய வர்கள் உட்பட) கல்லூரி மாணவர்களுக்கு விதிமுறைகளுக்கு உட்பட்டு கடன் கல்வி உதவித் தொகை, ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குநரால் வழங்கப் படும், இக் கடன் தொகை பெறுவதற்கு வருமான வரம்பு கிடையாது, இக் கடன் உதவித் தொகைக்கான புதிய/ புதுப்பித்தல், விண்ணப்பங்கள், சரிவர பூர்த்தி செய் யப்பட்டு, கல்வி நிலைய முதல்வர் மூலம் ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குநர். சென்னை-5 அவர்களுக்கு அனுப்ப வேண்டும்.

**6. பட்டயக் கணக்கர் படிப்பு:-**

ஒவ்வொரு ஆண்டும் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஆதி திராவிட இந்துக்கள் ஆதி திராவிட கிறிஸ்தவர்கள் மற்றும் பழங்குடியினர் இனத்தைச் சேர்ந்த (மதம் மாறியவர்கள் உட்பட) ஐந்து மாணவ/மாணவியர்களுக்கு அவர்களது பெற்றோர்/பாதுகாவலர் ஆண்டு வருமானம் ரூ. 6000/.க்கு மேற்படாமல் இருந் தால் பட்டயக் கணக்கர் படிப்புக்கு(3 வருடங்கள்) ஆதி திராவிடர் மற்றும் பழங் குடியினர் நல இயக்குனரால் கல்வி உதவித்தொகை அளிக்கப்படும்.

**7. சட்டப் பட்டதாரிகளுக்கு பண உதவி அளித்தல்:-**

தமிழ்நாட்டைச் சேர்ந்த ஆதி திராவிட இந்துக்கள் ஆதி திராவிட கிறிஸ்த வர்கள் மற்றும் பழங்குடியினர் இவற்றைச் சேர்ந்த (மதம் மாறியவர்கள் உட்பட) சட்டம் பயின்று வழக்கறிஞர் தொழிலை மேற்கொள்பவர்களில் பதினைந்து பேருக்கு நபர் ஒன்றுக்கு ரூ. 750- மான்யமாகவும் ரூ. 750- வட்டியில்லாக் கடனாகவும் சில நிபந்தனைக்கு உட்பட்டு நடப்பு ஆண்டில் பொருள் உதவி வழங்கப்படும். 1—6—1975க்குப் பிறகு வழக்கறிஞர் மன்றத்தில் சேர்ந்தவர்கள் தான் இவ்வுதவித் தொகை பெற தகுதியுள்ளவர்களாவர். இவர்களது பெற்றோர்-பாதுகாவலர் ஆண்டு வருமானம் ரூ. 6000-க்கு மேற்படாமலிருத்தல் வேண்டும். இந்த உதவித்தொகை சென்னை ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறை இயக்குநரால் வழங்கப் படும்.

8. கல்வி உதவித்தொகை அச்சுப்படிவங்களை சம்பந்தப்பட்ட கல்வி நிலையத் தலைவர்களிடம் இருந்தோ அல்லது ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குநர் சென்னை சம்பந்தப்பட்ட மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலரிடம் இருந்தோ பெற்றுக்கொள்ளலாம். தனிப்பட்ட முறையில் படிவங்களை தபால் மூலம் வேண்டுவோர் உப சாதி, மதம் மற்றும் எந்த வகையான படிவம் தேவை என்பது போன்ற விவரங்களுடன் தன் முகவரியிட்டு ரூபாய் ஒன்று பெறுமான அஞ்சல் தலைகள் ஒட்டப்பட்ட 23 செ.மீ. 10 செ.மீ, அளவுள்ள உறையுடன் விண்ணப்பம் செய்தல் வேண்டும்.

**ஆதிதிராவிடர் மற்றும்**
**பழங்குடியினர் நல இயக்குநர்**

DIPR: 28-39-83-32-EP

---

### ஐசரிவேலன் நிகழ்ச்சிகள்

26, 27—ந் தேதி குடந்தை, குடவாசல் ஒன்றியம்
28—குரோம்பேட்டை
29—சென்னை
30—ஒட்டன்சத்திரம் (மதுரை)
ஜூலை 1, 2 திருப்பூர்
3—பேரூர் (கோவை)
4—மதுரை
5—தர்மபுரி மராண்டஹள்ளி காரியமங்கலம்

---

விசாரணைக் கமிஷன் முன் ரவீந்திரநாத் சாட்சியம்:

# அமைச்சர் விஜயசாரதிமீது நான் எந்தக்குற்றசாட்டும்கூறவில்லை

**சென்னை, ஜூன் 25- ஆதிதிராவிடநலத்துறை அமைச்சர் விஜயசாரதி மீது நான் எந்தக்குற்றச்சாட்டும் கூறவில்லைஎன்று விசாரணைக்கமிஷன் முன் ரவீந்திரநாத் சாட்சியம் அளித்தார்.**

எரிசாராய கலவை ஆலை உரிமம் வழங்குவது பற்றி புகார் கூறப்பட்ட வுடன் அது பற்றி விசா ரணை நடத்த கழக அரசு விசாரணைக் கமிஷனை நியமித்தது தெரிந்ததே.

நீதிபதி ராமபிரசாத் ராவ் தலைமையிலான இந்த விசாரணைக் கமிஷன் முன் ரவீந்திரநாத் தொடர்ந்து சாட்சியம் அளித்தார்.

புரட்சித்தலைவர் சார் பில் ஆஜரானவழக்கறிஞர் ராம்ஜெத்மலானி கேட்ட கேள்விகளுக்குப் பதில் அளித்து ரவீந்திரநாத் கூறியதாவது:—

கேள்வி: சாராயக்கலவை ஆலை நடத்துவது மூலம் பல கோடி ரூபாய் லாபம் கிடைக்கும் என்று நம்பித் தானே இந்த வேலையில் இறங்கினீர்கள்?

பதில்: ஆண்டுக்கு ரூ. 17 லட்சம் லாபம் கிடைக்கும் என்று கருதி னோம்.

கேள்வி: எந்த முறை யைப் பயன்படுத்தியாவது அல்லது முறைகேடான வழிகளிலாவது லைசென்ஸ் பெற நினைத்தீர்களா?

பதில்: கவுதமன், பாலன் போன்றவர்கள் உதவியால் லைசென்ஸ் கிடைக்கும் என்றுநினைத் தோம்.

கேள்வி: கவுரவமான போட்டியின் மூலம் லைசென்ஸ் வாங்க முயற் சித்தீர்களா?

பதில்: நான் பெங்களூ ரில் இருந்ததால் இவர்கள் உதவி பெற்று லைசென்ஸ் பெறலாம் என்று நினைத்தேன்.

கேள்வி: லஞ்சம்கொடுக் காமல்லைசென்சைவாங்க வேண்டும் என்று நீங்கள் முயற்சி எடுத்தீர்களா?

பதில்: அவர்கள் உதவி யின்றி லைசென்ஸ் கிடைக்க வாய்ப்பில்லை என்று கருதினோம்.

கேள்வி: நீங்கள் பணம் கொடுத்ததாகக் கூறுகிறீர் களே? அது கவுரவமான செலவு என்று நினைத்தீர் களா?

பதில்: ஆலைக்கு வேண் டிய தண்ணீர், மின்சாரம் போன்றவை சப்ளை செய்ய அந்தத் தொகை பயன்படும் என்று கருதி னேன்.

கேள்வி: எனவே நீங் கள் செலவிட்ட பணம் கவுரவமான காரியத் திற்கு கொடுக்கப்பட்டது என்றுதான் கருது கிறீர்கள்?

பதில்: ஆம்.

கேள்வி: அமைச்சர் விஜயசாரதி பற்றி பின் னர் நீங்கள் ஏதாவது குற் றச்சாட்டு கூறினீர்களா?

## அமைச்சர் பற்றி குற்றச்சாட்டு கூறவில்லை

பதில்: அமைச்சரைப் பற்றி நான் எந்தக் குற்றச் சாட்டும் கூறவில்லை.

கேள்வி; அமைச்சர் விஜயசாரதியிடம் பணம் கொடுத்தது பற்றி ஏதா வது சொல்லி இருக்கிறீர் களா?

பதில்:- இல்லை.

கேள்வி:. அங்கே நடந்த பேச்சு வார்த்தை யின்போது இதுவரை ஏதாவது முறைகேடுகள் நடந்ததற்கான பேச்சு வார்த்தைகளோ அல்லது அதுபற்றி உங்கள் மனதில் ஒரு எண்ணமோ ஏற்பட்டதா?

பதில்: இல்லை.

கேள்வி:- முதல்வரிடம் தந்த மனுவில் அமைச்சர் விஜயசாரதியை சந்தித்த தேதியைக் குறிப்பிட்டு இருக்கிறீர்கள்?

பதில்: இல்லை.

கேள்வி: விஜய சாரதியை நீங்கள்சந்தித்த தாகக் கூறுவதைப்பொய் என்கிறேன்.

பதில்: இல்லை. சந்தித் தேன்.

## தி. மு. க. தூண்டுதல்

கேள்வி: உங்களது தி. மு. க. நண்பர்கள் தூண்டி விட்டதன் பேரில் இப்படி ஒரு புகாரைக் கொடுத்துஇருக்கிறீர்கள். அதோடு சம்பந்தப்படுத்தி கவுரவமான அமைச்சர் விஜயசாரதி பற்றியும் புகார் கொடுத்து இருக்கி றீர்கள்.

பதில்,- எனக்கும் அரசி யல் தொடர்பு இல்லை.

கேள்வி: உங்களை உங்கள் வக்கீல் விசாரிக் கும் போது விஜய சாரதியை சந்திக்க வந்த அன்று ஓட்டல் அசோகா வில் தான் தங்கி இருந்த தாக சொன்னீர்கள்.

பதில்:- தவறாகச் சொல்லி விட்டேன்.

கேள்வி: இப்போது கேட்டால் கன்னிமாராவில் தங்கி இருந்ததாகச் சொல்கிறீர் களே?

பதில்:- இப்போது நினைவு படுத்திய பிறகு கன்னிமாராவில் தங்கி இருந்தது தெரியவருகிறது

கேள்வி:- அமைச்சர் விஜயசாரதியை 1981 ஏப்ரல் 6-ம் தேதி காலை 7-30 மணிக்கு சந்தித்ததாக கூறி இருந் தீர்களே? ஆனால் இப் போது ஏப்ரல் 25-ம்தேதி என்று சொல்கிறீர்கள். இதில் எது சரி?

பதில்:- ஏப்ரல் 25 என்றுதான் நினைக் கிறேன்.

இவ்வாறு ரவீந்திரநாத் பதிலளித்தார். தொடர்ந்து கமிஷன் விசாரணை நடை பெறுகிறது.

இந்த வழக்கில் ராம் ஜெத்மலானி, ஏ. கே. சென், சிட்டாலே, என்.சி ராகவாச்சாரி, ஏ. சி. தேவர் அச்சரப்பக்கம் கணேசன் ஆகியோர் ஆஜ ரானார்கள்.

---

லெவல் கிராசிங்

விபத்து தொடருகிறது:

## 6 பேர் சாவு 16 பேர் காயம்

பூனா, ஜூன் 25— சமீபத்தில் பெங்களூர் அருகே ஆளில்லா லெவல் கிராசிங்கில் பஸ் ஒன்றும் ரெயிலும் மோதியதால் பலர் இறந்தது தெரிந் ததே.

பூனா அருகே ஸ்ரீராம்பூர் என்ற இடத் தில் லெவல் கிராசிங்கை கடந்து கொண்டிருந்த டிராக்டர் ட்ரெயிலரும் என்ஜினும்மோதிக்கொண் டதில் 6 பேர் இறந்தனர். 16 பேர் காயமடைந்த னர்.

டிராக்டர் டிரெயிலரில் ஏறிச் சென்றவர்கள் திருமணக் கோஷ்டி ஒன்றைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள்.

போலீசார் இந்த விபத்து குறித்துவிசாரித்து வருகிறார்கள்.

---

சேப்பாக்கத்தில்

27 ந் தேதி மாலை

## பொருளாளர் மாதவன் பேசுகிறார்

சென்னை, ஜூன் 25— சேப்பாக்கம் பகுதி கழகத் தின் சார்பில் 27-ந்தேதி மாலை 7 மணிக்கு நாகப் பையர் தெருவில் பிரும் மாண்டமான கழகப் பொதுக்கூட்டம் நடை பெறுகிறது.

மு. அன்புத்தம்பி தலை மையிலும், எஸ். எம். ஏ. ஜலீல் முன்னிலையிலும், பா, யாதவராமன் வரவேற்பிலும் நடை பெறும் இக்கூடடத்தில் கழகப் பொருளாளர் மாதவன், வை. பெருமாள் சுலோசனா சம்பத், டாக் டர் ரெக்ஸ், கு. க. செல்வம், கதிர் சோம சுந்தரம், எஸ், வி, மாரி முத்து, இரா. சின்னப்பன் பொ. புகழேந்தி, நீல கண்டன், கோபால், வேத முத்து, சம்பத் ரவீந்திரன், முகைதீன் குப்புசாமி, கண்ணன், சந்திரன், நீ. கல்யாணி மற்றும் பலர் பேசுகின்ற னர், தி. சண்முகம் நன்றி கூறுகிறார்.

# விவசாயிகளுக்கு வாழ்க்கை உத்தரவாதம் அளிக்கும் புதிய அமைப்பு

## முதல்வர் புரட்சித்தலைவர் தகவல்

பண்ருட்டி, ஜூன், 25- விவசாயிகளுக்கு வாழ்க்கை உத்தரவாதம் அளிக்கக் கூடிய புதிய அமைப்பு ஒன்றை அரசே ஏற்படுத்தும் என முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

பண்ருட்டியில் நடைபெற்ற அறுபெரும் விழாவில் கலந்து கொண்டு முதல்வர் புரட்சித் தலைவர் பேசியதாவது:-

நுழைவு வரி போட்டோம். வியாபாரிகள் நாங்கள் வரி கொடுக்கபயப்படவில்லை இதனால் தொல்லைகள் அதிகமாகும் லஞ்சம் ஊழல் பெருகும் என்றார்கள்.

நான் அவர்களிடம் குழந்தைகளுக்கு சத்துணவு போடவும் கிருஷ்ணா நதி நீர் திட்டத்தை நிறைவேற்றவும் பணம் வேண்டும்; அதற்கு நீங்களே வழி சொல்லுங்கள் என்றேன்.

கிருஷ்ணா நதிநீர் திட்டத்திற்கு 30கோடிரூபாய் கொடுத்திருக்கிறோம். அது இந்த ஆண்டுக்கு போடப்பட்ட திட்டத்தின் பணமல்ல. நியாயமாக வசூலிக்க வேண்டிய வரிகளை அதிகாரிகளை வைத்து வசூலித்து அந்தப் பணிகளைச் செய்கிறோம்.

இது 15, 20 ஆண்டு ஒப்பந்தம் அல்ல. காவிரி, போன்று 50 ஆண்டு ஒப்பந்தம் அல்ல. சென்னை உள்ளவரை, தமிழகம் உள்ளவரை, ஆந்திரம் உள்ளவரை இருக்கும் ஒப்பந்தம்.

அங்கே தம்பி என்.டி. ராமாராவ் ஆட்சிக்கு வந்திருக்கிறார். அவர் என்னை நம்புகிறார். நான்அவரைநம்புகிறேன். மக்கள் எங்களை நம்புகிறார்கள். ஒரே நாளில் ஒப்பந்தத்தில் கையெழுத்துப்போட்டு விட்டு வந்தோம். இது தான் ஒருமைப்பாடு. உண்மையான ஒருமைப்பாடு எழுத்திலே சொன்னால் போதாது. செய்து காட்டப்படவேண்டும்.

புதிதாக பாதை வசதி போட வேண்டும் என்கிறார்கள் அவர்களை கேட்கிறேன் நீங்கள் ஆட்சியில் இருந்தபோது இதைச் செய்திருந்தால் இப்போது நாங்கள் வேறு திட்டங்களை செய்ய முடியுமே. ஏன் செய்யவில்லை?

எங்கே பாதைவசதி, பேருந்து என்று மறியல் செய்வோம் என்கிறார்கள். மக்களைத் தூண்டி விடுகிறார்கள்,

தி. மு. க. ஆட்சிக் காலத்திற்குப் பிறகு நாங்கள் 4 ஆயிர[illegible] பஸ்களை விட்டிருக்கி[illegible]ம். ஒரு பஸ் 4 ல[illegible]ாய் என்றால் கூட [illegible]னை ஆயிரம் பஸ்க[illegible]கு பணம் எத்தனை கோடியாகும்?

### அனைவரும் சொந்தமே

எதிர்க்கட்சியினர் எங்களுக்கு வாக்கு அளிக்காவிட்டாலும் அண்ணா சொன்னது போன்று ஆட்சிக்கு வந்தபிறகு எல்லா ஜாதியினரும் மதத்தினரும் மொழியினரும் தமிழகத்தில் உள்ள அனைவரும் எங்களுக்குச் சொந்தம்.

நகரங்களுடன் கிராமங்களுக்கு தொடர்பு ஏற்பட்டால்தான் கிராமப்புறமக்கள் முன்னேற முடியும் என்பதால் பஸ்வசதி சாலை வசதி இணைப்புப் பாதைகளை ஏற்படுத்தி இருக்கிறோம்.

தி.மு.க. கம்யூனிஸ்டு கட்சியினரைக் கேட்கிறேன். போராடப் போகிறோம் என்கிறீர்களே, இந்த பகுதியில் மக்களுக்கு செய்திருக்கும் நன்மைகளை ஏன் செய்தீர்கள் என்று கேட்கிறீர்களா?

### இதுதான் கம்யூனிசமா?

கம்யூனிஸ்டு கட்சியினரைக் கேட்கிறேன். தொழிற்சாலைகளை ஏன் அரசு எடுத்துக்கொள்ளவில்லை என்கிறீர்களே மேற்கு வங்கத்தில் உள்ள ஜோதிபாசு உங்கள் முதலமைச்சர்-அவர் பொதுத்துறையில் இருந்த 26 தொழிற்சாலைகளை தனியாருக்கு கொடுத்திருக்கிறார். இது உங்களுக்கு கம்யூனிசமாகத் தெரிகிறது. இங்கு தனியார் பஸ்ஸை அரசு ஏற்று நடத்தினால் கம்யூனிசமாகத் தெரியவில்லை.

நாடோடி மன்னன் படத்தின் 100-வது நாள் விழாவில் அண்ணா அவர்கள்கலந்து கொண்டுபேசினார். எம் ஜி ஆர் சொல்லியிருப்பது தி மு க வின் கொள்கை என்றார். அது படமாக்கப்பட்டிருக்கிறது. அண்ணாவே இது எங்கள் கொள்கை என்றுசொல்லியிருக்கிறார். அப்படியானால் நான் அவைகளை நிறைவேற்றத் தானே வேண்டும்?

நீங்கள் திட்டங்களைப் பாராட்டவேண்டாமா? பாராட்டவில்லையென்றாலும் போராட்டம் நடத்தாமல் இருக்கக் கூடாதா?

### நாங்கள் போராட்டம் நடத்தினால்,..

கைது செய்துபாருங்கள். சிறைச்சாலை நிரப்புவோம் என்கிறார்கள். நாங்கள் போராட்டம் நடத்த முடியாதா? அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் போராட்டம் நடத்தவேண்டும் என்றால் 10 லட்சம் பேர் கூட மாட்டார்களா? கழகம் ஆட்சியில் இருக்கும்போது போராட்டம் நடத்தாது.

கருணாநிதிக்கு சொல்லிக் கொள்கிறேன், பேரணியை தடை செய்யும் நோக்கம்இல்லை. தாராளமாக நடத்துங்கள். ஆனால் எந்த பொதுச்சொத்துக்கும் உயிருக்கும் சேதம் வரக் கூடாது. முதலமைச்சர் என்ற நிலையில் கருணாநிதிக்கு இதைசெய்தியாக சொல்கிறேன்.

பணக்காரர்களை ஏழைகளாக்குவதும் ஏழைகளை பணக்காரர்களாக்குவதும் பொதுவுடமை கொள்கை என்றால் அண்ணாவின் கொள்கை அதுவல்ல,

பணக்காரர்கள் பாதுகாக்கப்படவேண்டும். ஏழைகள் பணக்காரர்களாக்கப்படவேண்டும் என்பது தான் எங்கள் கொள்கை.



விவசாயிகளுக்கு பாதுகாப்பு இல்லை. பயிர் இன்சூரன்ஸ் திட்டத்தை அனைவரும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

தொழிலாளர்களைப் பற்றி கவலைப்பட தொழிற்சங்கம் இருக்கிறது விவசாயிகளைப் பற்றி கவலைப்பட சங்கம் இருக்கிறதா?

மீனவர்களுக்கு கூட்டுறவு சங்கங்கள் அமைத்திருக்கிறோம். அதில் சேர்ந்து விசைப்படகு போன்றவைகளை பெற்று தொழில் செய்கிறார்கள்.

அதுபோல அரசின் சார்பில் விவசாயிகளுக்கு ஒரு அமைப்பு ஏற்படுத்தப்பட இருக்கிறது. அதில் விவசாயிகள் சேர்ந்தால் வாழ்க்கை உத்தரவாதம் பெறலாம்.

அண்ணாவின் கொள்கைகளுக்கு — நல்ல திட்டங்களுக்கு ஆதரவு தாருங்கள். திட்டங்களைத் தீட்டி மக்களுக்குவசதியை செய்து கொடுப்போம்.

சிதம்பரம் தீட்சதர்கள் ஏதோ தவறு செய்து விட்டார்கள். அவர்களுக்குள் பிரச்சினை இருக்கிறது. அவர்களுக்கு வாய்ப்பு கொடுக்கிறேன். அவர்களின் பிரதிநிதிகள் என்னை வந்து சந்திக்கட்டும். சுமுகமாகத் தீர்த்து வைக்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

# அண்ணாசாலை: கார்கள் நிறுத்த தனி இடம்

சென்னை, ஜூன் 25— சென்னை அண்ணா சாலையில் வாகனபோக்குவரத்து அதிகம் இருந்து வருவதைத் தொடர்ந்து கார்களை நிறுத்தி வைப்பதற்கும் தனி இடங்கள் ஏற்படுத்தப்படவிருக்கின்றன.

அரசு தோட்டம், கலைக் கல்லூரி மற்றும் டி. எம். எஸ். காம்பவுண்ட் ஆகிய இடங்களில் இதற்கான ஏற்பாடுகள்செய்யப்படும்.

இந்த இடங்களில் கார்களை நிறுத்துவதற்குகார் சொந்தக்காரர்களிடம் இருந்து குறைந்த கட்டணம் வசூலிக்கப்படும்.

இதுபோன்ற நிறுத்தும் இடங்கள் பூந்தமல்லி நெடுஞ்சாலையிலும் ஏற்படுத்தப்படவிருக்கிறது. அரசுக்குச் சொந்தமான இடங்கள் தேர்வு செய்யப்படவிருக்கின்றன.

சுரங்கப் பாதைகள் அமைக்கப்பட்டிருந்தும் பொதுமக்கள் அதை உபயோகப்படுத்தாமல்சாலையின் குறுக்கே செல்கிறார்கள். இதைத்தடுக்க சுரங்கபாதை அருகே சாலையின் நடுவே சுமார் 25 மீட்டர் நீளத்துக்கு தடுப்புச் சுவர் கட்டுவதற்கும் அரசு யோசித்து வருகிறது.